[15th February 1958

*Government Servants' Conduct Rules.*

* 6 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) whether the Madras Civil Services Joint Council has recommended to the Government to amend the Government Servants' Conduct Rules; and

(*b*) if so, in what respects?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI : அரசியல் சட்டப் பிரகாரம் கூட்டம் கூடுவதற்கும், சங்கங்கள் அமைத்து அவைகளில் சேருவதற்கும் உரிமை இருக்கும்போது, என். ஜீ. ஓ-க்கள் அந்த உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதை ஏன் தடைசெய்யவேண்டும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : என்.ஜீ.ஓ-க்கள் கூட்டம் கூடுவதை நாங்கள் தடைசெய்யவில்லை. அவர்கள் கூட்டம் கூடிப் பேசுகிறார்கள். சங்கம் அமைத்து அதில் சேருகிறார்கள். இதையும் தடை செய்யவில்லை.

*Personal files for N.G.Os.*

* 7 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Finance be pleased to state whether the Madras Civil Services Joint Council has recommended to the Government the abolition of the system of maintenance of personal files for Non-Gazetted officers?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

SRI N. K. PALANISAMI : மேல் அதிகாரிகளின் 'விம்ஸ் அண்ட் பான்சீஸ்' படி தான் 'ப்ரொமோஷன்ஸ்' கொடுக்கப்படுகின்றன. ஆகவே ஒருவருடைய தகுதியையும் (மெரிட்), ஒருவர் எவ்வளவு தவறுகள் செய்திருக்கிறார் என்பதையும் பார்த்து, அவருக்கு 'ப்ரொமோஷன்' கொடுப்பதற்கு என்ன கஷ்டம் இருக்கிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM. : ஒருவருடைய, மெரிட்ஐ எப்படி நிர்ணயிப்பது என்பது தான் இப்போதுள்ள பிரச்னை. மெரிட்டை நிர்ணயிப்பதற்குத்தான் 'பெர்ஸனல் பைல்ஸ்' இருக்கின்றன. உத்தியோகஸ்தர்களைப் பற்றி 'பெர்ஸனல் பைல்ஸ்'-ல் பாதகமாக ஏதாவது எழுதப்படுமானால் அது அவர்களுக்குத் தெரிவிக்கப்பட்டு, அவர்களுடைய 'எக்ஸ்ப்ளனேஷன்ஸ்' பெறப்படுகின்றன. பெர்ஸனல் பைல்களில் எழுதப் பட்டிருப்பது, உத்தியோகஸ்தர் கொடுத்திருக்கும் எக்ஸ்ப்ளனேஷன் ஆகிய இரண்டையும் கவனித்துத் தான் ப்ரொமோஷன் கொடுக்கப்படுகிறது. ஆகவே பெர்ஸனல் பைல்கள் இல்லாவிட்டால் உத்தியோகஸ்தர்களின் தரத்தையே நிர்ணயிக்க முடியாது.

SRI K. ANBAZHAGAN : கெஜட் பதிவில்லாத உத்தியோகஸ்தர் களின் தனிப்பட்ட ஏடுகளில் சில காரணங்களினால் தனிப்பட்ட மாறுபாடு கொண்டு அதிகாரிகள் அவர்களைப்பற்றி குறிப்பிடும் குற்றங்கள் மேலதிகாரி களால் உடனுக்குடன் கவனிக்கப்பட்டு நீக்கப்படுகின்றனவா ?

15th February 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆமாம். பெர்ஸனல் பைல்களில் எழுதப்படும் விஷயங்களை மேலதிகாரிகள் கவனிக்க வேண்டியிருக்கிறது. எந்த உத்தியோகஸ்தரைப் பற்றியாவதுஅவருடைய பெர்ஸனல் பைலில் ஏதாவது பாதகமாக எழுதப்பட்டால், அது பாதிக்கப்பட்ட அந்த உத்தியோகஸ்தருக்குத் தெரிவிக்கப்பட்டு, அவர் ' எக்ஸ்ப்ளனேஷன் ' கொடுத்தால் அது பெற்றுக்கொள்ளப்பட்டு அதுவும் பெர்ஸனல் பைலில் பதிவு செய்யப்பட வேண்டியிருக்கிறது.

SRI K. VINAYAKAM : Sir, is it a fact that some complaints have reached the Government that some superior officers on the last stages of transfer make some adverse remarks in the file of their junior officers, with the result that no reasonable opportunity is given to the junior officers to explain their conduct to the particular officer who makes such remarks in their files?

THE HON. SRI C. SUBRAMANIAM : I am not aware of any such complaint but if any individual cases are brought to the notice of the Government, certainly they will be considered.

*Water-Supply Scheme for Erode*

* 8 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether any deputation from Erode Municipal Council had an interview with the Minister in connexion with the provision of funds for the Erode Water-supply Scheme in 1958?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir.

SRI N. K. PALANISAMI : முதலில் அங்கு இருக்கக்கூடிய சேர்மன் தண்ணீர் திட்டம் பற்றி விவாதிப்பதற்கு வருகிறேன் என்று சொல்லும்போது வேண்டாமென்று சொல்லிவிட்டு, எதிர்க்கட்சியில் உள்ளவர்களை வரச் சொல்லி விவாதிக்க காரணம் என்னவென்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தமாதிரி ஒன்றுமில்லை. என் ஞாபகத்திலிருந்து சொல்லுகிறேன்—இந்தத் தருணத்தில் ஒரு டெப்யுட்டேஷன் அவசிய மில்லை என்று சொல்லியிருக்கலாம். மீண்டும் நாங்கள் வருகிறோம் என்று சொன்னால் வாருங்கள் என்று சொல்லியிருக்கலாம்.

*Water-Supply Scheme for Tiruppur Municipality*

* 9 *S.N.Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Revenue be pleased to state the amount allotted in 1957–58 for Water-Supply Scheme for the Tiruppur Municipality?

THE HON. SRI M. A. MANICKAVELU : A loan of rupees ten lakhs has been sanctioned to the Municipal Council, Tiruppur, during the current year.

SRI N. K. PALANISAMI : தண்ணீர் எந்த இடத்தில் எடுப்பது என்று முடிவு செய்யப்படவில்லை. அப்படியிருக்கும்போது ஏராளமான பணம் செலவு செய்து பைப்புகள் போட்டிருக்கிறார்கள். எந்த இடத்தில் தண்ணீர் எடுப்பது என்பது பற்றி முடிவு செய்யப்பட்டு விட்டதா ?